

# விநாயகர் தோத்திரப்பா மஞ்சரி




பதிப்பாசிரியர்:

செ. சோம. ராமசாமி செட்டியார்,

அரிமளம்.

3/2

# முன்னுரை

நான் சிவனிடம் பக்தி கொண்டு 1008 ருத்ராக்ஷ பூவினுல் ஓம் அச்சரம் செய்து 12 திருமுறைகள் வாழ்த் துரைகள் சொல்லிவந்ததைப்பார்த்தவர்களில் நற்சாந்துபட்டி வீரப்ப செட்டியார் அவர்கள் என்னைக் கிரமமான சிவபூஜை எடுத்துஅனுஷ்டிக்கும்படி அடிக்கடி சொல்லிவந்தும்ன்னியில் என்னை தேவகோட்டை "செந்தமிழ் புரவலர்" சிவபூஜா துரந்தரர் சைவத்திரு, சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களுக்கும், பாலகவி ராமநாதன் செட்டியார் அவர்களுக்கும் அறி முகம் செய்து வைத்தார்கள்.

எனக்குமுன் உள்ளிருந்து பழநி "சைவசித்தாந்த சரபம்" ஸ்ரீ ல ஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் அவர்களிடம் விஷேட தீக்கையும் சிவ தீக்கையும் பெற்று சிவபூஜை செய்து வருகிறேன்.

சென்ற இரண்டு ஆண்டுகளில் சிவபூஜை மகா நாடு அரிமளத்தில் கூட்டி சிவபூஜை செய்யச் செய்தும் மகேஸ்வர பூஜையும் நடத்தியும் வைக்க வாய்ப்பும் பெற்றேன்.

சிவ பூஜையின் நிமித்தம் பல அரிய நூல்களி லிருந்து "அருள் பெற்ற பாவலர்" பலராலும் விநாயகர் திருவடிகளில் சாத்தப் பெற்ற பாமாலைகளின் காப்புச்

செய்யுள்களையும் சிலபாக்களையும் எடுத்து தொகுத்து இந்த "பாமஞ்சரி" யில் 108 பாடல்களைச் சேர்த் திருக்கிறேன். இந்த முயற்சிக்கு அன்பர்களின் ஆதரவு கிடைக்குமென நம்புகிறேன்.

என் சிவபூஜைக்கு காரணமான தேவகோட்டை **"சேவு. மெ. மெய்யப்ப செட்டியார்"**, பாலகவி **மெ. ராமநாதன் செட்டியார்**, நற்சாந்துபட்டி **வீரப்ப செட்டியார்** இவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரித்தாகுக! மேலும் இந்நூல் வெளியிட உதவிய அன்பர்களுக்கும் அச்சகத்தாருக்கும் எனது உளம் கனிந்த நன்றி உரித்தாகும்,

வணக்கம்

சிவ பூஜகன்
செ. சோம. ராமசாமி செட்டியார்
அரிமளம்.

# தமிழ்த் தெய்வ வணக்கம்

நீராரும் கடலுடுத்த
நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத்
திகழ்பரத கண்டமதில்
தக்கசிறு பிறை நுதலும்
தரித்த நறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த
திராவிடநற்றிரு நாடும்
அத்திலக வாசனைபோல்
அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க
இருந்தபெரும் தமிழணங்கே !

— மனோன்மணீயம்

# நீர்வளமும் நிலவளமும்

நீர்வளமும் நிலவளமும்
நிறை கின்ற நாடு
ஏர்வளத்தின் பேர் வளத்தால்
ஏற்றமுள்ள நாடு
பொற்குவையால் நெற்குவையால்
புகழடைந்த நாடு
சிற்பமுடன் ஓவியங்கள்
சிறந்திருந்த நாடு
வாழை பலா மரங்கள்
வளமிகுந்த நாடு
தாழைபனை தென்னைஇவை
தழைத்திருந்த நாடு
ஆஇனத்தின் அருமைஅறிந்
தாதரித்த நாடு
கோவில்களும் கோபுரமும்
கொண்டளிக்கும் நாடு
மல்லியொடு முல்லைமலர்
மணம்கமழும் நாடு

அல்லியொடு தாமரையும்
அழகுமிக்க நாடு
பள்ளர்களும் மல்லர்களும்
பண்மிழற்றும் நாடு
வல்லர்களும் வீரர்களும்
வாழ்ந்திருந்த நாடு
கைத்தொழிலும் வாணிபமும்
கற்றறிந்த நாடு
வித்தையினில் வல்லவர்கள்
வீற்றிருந்த நாடு
ஔவைதிரு வள்ளுவர்கள்
அறம் உரைத்த நாடு
எவ்வெவரும் போற்றுகின்ற
எங்கள் தமிழ் நாடு

உ
ஓம்

# விநாயகர் வரலாறு

தனக்குமேல் ஒரு தலைவரில்லாதவர் விநாயகர் என்பது அவர் திருநாமத்தால் இனிது பெறப்படும். 2. ஓங்கார உருவினர் எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்பவர் பிரணவத்தின் அர்த்தம் பிர்மா விஞலும் சொல்ல முடியாவிட்டால் மற்றவருல் எப்படி கூறமுடியும்? அவரவர்களும் தெரிந்தமட்டும் கூறுவ தாயிருந்தாலும், தெரிந்ததுடன் தெரியாத்தனத்தை யும், புரியாத்தனத்தையும், காட்டும் என்பதுதான் துணிபு.

அதில் ஒன்று தான்யாம் கூறுவதும் பிரணவம் என்பது ஓங்கார அக்ஷரமாம்! அது ஓம் இதுவாம் வட்டம், சதுரம், முக்கோணம் என்ற அமைப்பை ஒற்றிருக்கும். அகர, உகர, மகர அமாத்திரை என்ற மூன்றறை மாத்திரையாக உச்சரிக்கப்படுகின்றது. நாதம், விந்து, சக்தி, சிவம், என்றபொருளை உணர்த்து கின்றது, என்று சிலர் கூறுவார்கள்.

பிர்மா விஷ்ணு ருத்ரன் என்ற காரிய பிரமத்தை அ. உ. ம. என்ற மூன்று அக்ஷரங்கள் உணர்த்து கின்றன. அமாத்திரை காரணப் பிரமத்தை உணர்த்து கின்றது. என்று சிலர் கூறுவார்கள். அகரம் துவம்ப

தம் என்றும் அதற்கு தூல, சூக்ஷ்ம காரணம் என்ற 3 சரீரமும், சாக்ஷ்ர சொப்பன சுழுத்தி என்ற 3 அவஸ்தையும், விஸ்வ, தைஜத, பிராக்ஞன் என்ற 3 அபிமானியும் கூடஸ்தன் 1-ம் ஆகப்பத்தும் வாச்சியம் என்றும்.

உகரம் தத்பதம் என்றும் அதற்கு விராட்டு இரண்யகர்ப்பம் அவ்வியாகிருதம் என்ற சரீரத்திரயமும் அதாவது 3 சரீரமும் சிருஷ்டி திதி சம்மாரம் என்ற 3 அவஸ்தையும், வைஸ்வானரன் சூத்ராத்மா, அதீதர்யாமி என்ற 3 அபிமானியும் பிரம்மம் 1 ம். ஆகாபத்தும் வாச்சியம் என்றும் மகரம் அசிபதம் என்றும் அதற்கு சத்ருபசக்தி சித்ருபசக்தி, ஆனந்தருபசக்தி, என்ற 3 சரீரமும் சர்வ வியாபகம்; சர்வப் பிரகாசம்; சர்வானந்தம் என்ற 3 அவஸ்த்தையும் பரிபூரணர்தே ஜோமய.. பரமானந்தர் என்ற 3 அபிமானியு சுத்தப்பிரமம் 1ம் ஆகப்பத்தும் வாச்சியம் என்றும் அ. மாத்திரை முப்பத்தின் முடிபொருளும் வாக்கியமான ஓங்காரத்தின் அகண்டார்த்தமுமாகிய சர்வசாக்ஷ் என்றுப் சிலர் கூறுவர்.

மேலும் புத்திவலியாலும் யுக்திவலிவாலும், வாக்கு வண்மையிறுலும் வேண்டிய வேண்டியாங்கு விரித்து சாங்கோப சாங்கமாகக் கூறலாம்

சுருக்கமாக இது கூறினேன் ஓங்காரத்தின் முதற் பாகமாகிய அகரத்தில் துவம்பத வாச்சியத்தையும் இரண்டாம் பாகமாகிய உகரத்தில் தத்பத வாச்சியத்தையும் மூன்ரும் பாகமாகிய மகரத்தில் அஸிபத வாச்சியத்தையும் ஒடுக்கி அகரத்தை உ. கரத்திலும் உகரத்தை மகரத்திலும் ஒடுக்கி மகரத்தை அகண்டார்தமாகிய அமாத்திராருபமான சர்வசாக்ஷி

யில் ஒடுக்கி அதுவும் சித்தா சாமான்யமாகப் பார்த்து அதையும் சத்தா சாமான்யமாகக் கண்டு ஆனந்த அதிவாழ்வில், அமர்ந்திருப்பதே அனுபவார்த்மமாகச் சிலர் கூறுவர்.

இவ்வாறு சுருக்கமாகக் கூறினேன் இதை விரித்துரைக்க கருதின் வருடம் ஒன்றினாலும் அமையாது அறிவின் விரிவைச் கருதியுள்ளது.

பிரணவ சொருபாயநம:



## பதிப்புரை

நில உலகத்தில் உதித்த உயிர்வர்க்கங்களில் மானிடப் பிறவிக்கி மட்டுந்தான் முதுகு நேறே உள்ளது மற்ற பிறவிகளுக்கு முதுகு குருக்கே உள்ளது. உதித்த குழந்தைகளை நாம் பார்த்தும் வளர்த்தும் வருகின்ரேம். அவைகள் ஒவ்வொரு அவயவங்களை யும் வளர்ச்சிக்கி ஏற்ப அசைந்து புரண்டு தவழ்ந்து ஒடி ஆடி வருகின்றமையால் நீர் மலம் கழிப்பதுடன் திடகாத்திரமாக வளர்ந்து வருகிறது. அதே போல் ஆண், பெண் இருவர்களும் அதை சிந்தித்து வரி வடிவிலும், ஒலி வடிவிலும் தெரிந்துகொண்டதை அனுசரித்து அவரவர்களால் இயன்ற அளவு உடற் பயிற்சி செய்து வரவேண்டியது, அவசியத்திலும் அவசியம். அதினல் சோம்பல் இல்லாது சுரு சுருப்பாக வாழ்ந்து வருவதுடன் ஒர் அளவு நோய்கள் குறைவ தோடு அதற்காக செலவிடும் பணங்களும் அவஸ்த் தையும் குறையுமென்பது துணிபு.

மானுடத்து உதித்தல் கண்டிடில் கடலை கையால் நீந்தின காரியங்காண், என்பது சிவஞான சித்தியார். பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற நாம் உலக போகங்களை அனுபவிப்பதற்கு எத்துணையோ முயற்சிகளை மேற்கொண்டு, உழைத்து வருகிரேம் இவ்வுழைப்பால் வரும் பயன் இந்த உடம்பளவில் நின்று ஒழிந்துபோய்விடும். இம்மைக்கும் மறுமைக் கும் நின்றுதவுவது இறைவழிபாடு. அது மனம் மொழி

மெய் ஆகிய மூன்றினாலும் செய்யப்பெறுவது. தோத்திரங்களால் செய்யும் வழிபாடு இம்மூன்று காரணங்களிலும் தொடர்பு பெறும் இதனாலேயே நமது ஆன்றோர்கள் தோத்திரப்பாடல்கள் பலவற்றை ஆக்கி அருளி இருக்கிறார்கள்.

பரம்பொருளாகிய சிவபெருமான் மெய்யடியார்களின் துன்பங்களை நீக்கி, இன்பங்களை வழங்குவதற்காக பல்வேறு திருவடிவங்களை தரித்துக்கொண்டு எழுந்தருளியிருப்பார் அத்தகைய மாகேசுரமூர்த்தங்கள் பலவற்றுள் **விநாயகர்** திரு உருவம் ஒன்று விநாயகப்பெருமானை வழிபாடு செய்து வருகிறவர்களுக்கு இடையூறுகளெல்லாம் நீங்கும் எண்ணிய எண்ணியாங்கு இன்பம்யெய்தும் நிகழ் வைகாசித் திங்கள் 32. மூலநன்னாளில் நமது சைவசமய பரமாசாரியாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குருபூசை பால் அடியேனுக்கு தேவகோட்டை சிவத்திருதத் புருஷ தேசிகர் பாலகவி ராமனாதன் செட்டியார் அவர்கள் உடையவர் பூஜை எழுந்தருளச் செய்து தந்துதவியிருக்கிறார்கள்.

பரசிவஞானத்தில் விருப்புடைய அறிஞர்கள் பிரதிதினமும் பாராயணம் செய்வதர்க்கு அனுகூலமாய் விநாயகர் காப்பு முதற் பாக்களையே தொகுத்து ஒரே புத்தகமாய் பேரறிஞர்களின் அனுமதியாலும் விநாயகர் இன்னருளாலும் திரட்டிய இத்தொகுப்பு நூலைச் சைவ உலகத்துக்கு சமற்பிக்கிறேன். இதில் பிழையுள்ளதாயின் பெரியோர்கள் பொருப்பாராக.

---

திருப்பூவனம் வேதாந்தமடம்

## ஸ்ரீ காசிகாநந்த ஞானசாரிய சுவாமிகள்

## இயற்றிய சாற்றுக்கவி

விரிவுறும் உவகை ஆக்கியே அளிக்கும்
விநயகன் பெருமையை விளக்க
அரிய நூற்பாவின் நூறுடன் எட்டும்
ஆகவே தொகுத்தனன் அன்பால்
பிரியமா யாவரும் தோத்திரம் செய்து
பெறு முத்தி அடைவதற்காக
அரிமளம் என்னும் ஊர் வதிந்திடும்
ராமசாமி என்னும் பெயருளான் அம்மா

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# விநாயகர் தோத்திரப்பா மஞ்சரி

1 திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்-உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானை
காதலால் கைகூப்பு வார்.

-கபில தேவர்

2 சத்தி யார்ய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெய
சுத்தி யாகிய சொற் பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

-பரஞ்சோதி முனிவர்

3 எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் சேய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைதாழ் செவி நீள்முடிக்
கடக் களிற்றைக் கருத்துளிருத்துவாம்.

-திருத்தொண்டர் புராணம்

4 ஓத வினையகலும் ஓங்கு புகழ்பெருகும்
காதற் பொருள் அனைத்தும் கைகூட்டும் சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேல் பாரதப்போர் தீட்டும்
தனிக் கோட்டு வாரணத்தின் தாள்.

-பெருந்தேவனார்

5 வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு

-ஔவையார்

6 பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்-கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்து தூமணியே நீ எனக்குச்
சங்கத்தமிழ் மூன்றும் தா

-ஔவையார்

7 வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்

-உமாபதிசிவம்

8 அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற் [பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்தில் மேவு
கணபதியைக் கைதொழுதக் கால்

-விவேகசிந்தாமணி

9 குள்ளக் குள்ளனே குண்ட வயிறனே
வெள்ளப் பிள்ளையே விநாயக மூர்த்தியே

-தனிப்பாடல்

10 ஒற்றை மருப்புடையான் ஓங்காரப் பேருருவான்
முற்று மதிசூடி முக்கண்ணன்-சுற்றும்
அரவுடையான் ஐயாறன் ஆனைமுகன் தானே
பரவிடுவோம் நித்தம் பணிந்து

சா. கணேசன்

11 எவைஎல்லாம் செய்தோம் எவைஎல்லாம்
[செய்வோம்
அவை எல்லாம் எம்செயல்கள் அல்ல -சிவைபாலா
அத்தனையும் நின்செயலே அப்பலனும் நிற்கேதான்
முத்திஅருள் வேழ முகா
-சா. கணேசன்

12 ஆடியபாதா நீடியகருணை ஆனை முகத்தோனே
தேடியபோது ரகசியமுடனே சீக்கிரம் நீவருவாய்
பாடியநாவும் சூடியதமிழும் பகரும் பெருமாளே
நாடிய சூடிய நாவிலும் வந்தருள் நல்ல
[விநாயகனே

13 தன்னோங்கு மலரடியும் தளிரோங்கு சாகைகளும்
மின்னோங்கு முகக்கொம்பும் விரவியகண்
மலர்களுமாய்
மன்னோங்க நடமாடு மன்றோங்கு மதிற்குடபாற்
பொன்னோங்கன் முன்னோங்கும் பொற்பமர்கற்
[பகம்போற்றி

14 ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன்
னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

15 பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடிஅளித்த
ஓரானை வந்து உளத்து.

16 கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனும் கைதொழும்
கணபதி என்றிடக் கரும மாதலால்
கணபதி என்றிடக் கவலை தீருமே.

17 திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்து பிள்ளையைப் பேணுவாம்.

18 பூமேவு நான்முகனும் பொன்மேவு மார்பனுமுன்
[போற்றுகின்ற
பாமேவு சித்ரசபா பதிநடனப் பத்ததனைப் பாடப்
பைம்பொன்
மாமேரு வேடாக எழுத்தாணி கோடாக வரையு
[மெந்தை
காமேவு கரிமுகத்துக் கற்பகத்தின் பொற்பாதங்
[காப்பாகும்மே.

-குருபாததாசர்

19 நல்ல சொற் பொருணுளு நடாத்தவும்
எல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வெல்லும் யானை முகத்தினை மேவிவாழ்
வல்ல பைக்குரி யானை வழுத்துவாம்.

20 ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
[நால்வாய்ஐங் கரத்தன்ஆறு
தருகோட்டம் பிறையிதழி தாழ்சடையான்
[தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடு வணங்கி யோவாதே யிரவு
[பகல் உணர்வோர் சித்தைத்
திருகோட்டு மயன்திருமால் செல்வமும் ஒன்
[றேவென்னச் செய்யுந் தேவே

21 உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமென்னுந்
[தறிநிறுவி உறுதியாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
[இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்களித்துண்டு
[கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்து
[வரு வினைகள் தீர்ப்பாம்.

-திருவிளையாடற்புராணம்

22 முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
[முழுதகற்றும் முகத்தினனே
அற்பசுகத்து எனையழுத்தா ஐங்கரனைப்
[பிற்பவமும் அகற்றுங்கோவே
சொற்பழுது புரியாத வணிகர்குலம் தினம்
[பணியுந் துணைத்தா ளானைக்
கற்பகத்தின் மிடியகற்றுங் கற்பகமாம்
[விநாயகனைக் கருத்துள் வைப்பாம்.

23 அகரமென அறிவாகியுலக மெங்கும்
[அமர்ந்தகர வுகரமக ரங்க டம்மாற்
பகருமொரு முதலாகிய வேறுமாகிப் பலவேறு
[திருமேனி தரித்துக்கொண்டு
புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந்தெய்தப்
[போற்றுநருக்கறக்கருணை புரிந்தல்லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந்தாண்டு கொள்ளு
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்

-விநாயக புராணம்

24 திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

-கந்தபுராணம்

25 இன்ப மாயத ருதிடை யோங்கவுந்
துன்ப மாயது தூரத்து நீங்கவும்
முன்ப ராபரன் மொய்குழ லோடனைந்
தன்பி னீன்றவோர் யானையைப் போற்றுவாம்.

26 கருவுரு வினுமுள கவலைகள் களைவா
னருவினை யொடுமத னதுமுத லரிவா
னிருமல னிணையடி நிழலினை யடைவான்
பரிவோடு கரிமுக னடியினைப் பணிவாம்.

-உருத்திரசங்கிதை

27 வேழமுகத்து விநாயக னைத்தொழ வாழ்வு
[மிகுத்துவரும்
வெள்ளைக் கொம்பன் விநாயகனைத்தொழத்
துள்ளியோடும் தொடர்ந்த வினைகளே.

-ஔவையார்

28 உலக நீதி புராணத்தை யுரைக்கவே
கலைகளாய் வரும் கரிமுகன் காப்பு

-ஔவையார்

29 நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனை மாலை சிறந்திடவே
பஞ்சக் கரவானை பதம் பணிவாம்

-அருணகிரிநாதர்

30 அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த
[வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு
[வார்தலையிற்
றடப டெனப்படு குட்டுடன் சர்க்கரை
[மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக்கிளைய களிற்றினையே.

-அருணகிரிநாதர்

31 செய்ய வீரநல் சேகரச் செம்மல்மேல்
உய்ய வேண்டி உஞற்றுநல் பாவைதான்
வைய கம்புகழ் வண்ண முடிந்திட
ஐயன் மாமுகன் ஐங்கரன் போற்றுவாம்

காசிகானந்தசுவாமிகள்

32 உருவல னருவல ஞெருவன்மற் றிருவருக்
கரியவ னெனவுணர்ந் தறை குநரறைகமற்
பரவைதன் மனைவயிற் பாவல னேவலி
னிருமுறை திரிதலி னெளியனென் றெளியனும்
பரவுவன் மன்றம் பணிந்து

-குமரகுருபரர்

33 அத்தனும் அயனுமாலு மானநல் ரிஷிகள் தேவர்
நித்தமும் பலாபலன்கள்நெறியுடன் தெளிவதற்குச்
சித்திர புத்திரர் செனித்ததோர் கதையைப்பாட
மத்தமுந் தொந்தி வயிறுநங் காப்பதாமே.

34 சீர் கொண்ட பூதலத்திற் சித்திர புத்திரன்
[கதையை
பார் கொண்ட செந்தமிழ்ப் பாடவே -ஏர்கொண்ட
வார்பூத்த கோலமுலை மாதுஉமையா ளீன்றெடுத்த
கார்பூத்த குஞ்சரமே காப்பு.

35 ஆனைமுகமு மொருகொம்பும் அகன்ற மார்புஞ்
[சிறுகண்ணும்
பானைபோல் பெருவயிறும் பாங்கார் பூணு
[நூலழகும்
தானே தோன்றி எனதுளத்திற் றயவாய் வாழும்
[விநாயகனே
நானேயுனது பதந்தொழுதே ஞவிலுதிப்பாய்
[கணபதியே

36 மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவ னடிமலர் பணிந்து போற்றுவாம்

37 தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையும்
[சாத்துந்தில்லை
யூரர்தம் பாகத்து உமைமைந்த னேயுல
[கேழும்பெற்ற
சீரபி ராமியந்தாதியெப் போதுமென்
[சிந்தையுள்ளே
காரமர்மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே.

-அபிராமியந்தாதி

38 முப்பழமும் சர்க்கரையும் மோதகமும்
[இம்மூன்றும்
செப்பரிய செல்வக் கணபதியே —ஒப்பத்
தருவேன் உளமாரத் தப்பாது நீயும்
தருவாய் எனக்குத் தமிழ்.

39 ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடிபோற்று கின் றேனே.

-திருமூலர்.

40 ஒன்றியநல் லோர்எழுத்தாய் உயர்ச்சிமிகும்
[ஐந்தெழுத்தாய் உலையா இன்பம்
நின்றுதரும் ஆறெழுத்தாய் நிலவியநல்
[லெட்டெழுத்தாய் நேரேஞானந்
துன்றியநன் மந்திரமுந் துங்கமத கயமுகத்தோன்
[துரிசில் தேவி
மன்றிருநன் மந்திரமும் வடமொழியில் வழங்கு
[முறை வழுக்கா தாய்ந்தே.

41 பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தன்மேல்
தேமே வியசதகம் செப்பவே–கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு.

**-குமரேசசதகம்**

42 வாகை பெறு செயங்கொண்டான் நேமநகர்
வரலாற்றை வகுத்துரைக்கத்
தோகையடி கணபதியே வெயிலுகந்த நாயகனைத்
[துதித்து வாழ்வாம்.

**நேமங்கோயில் வரலாறு**

43 மாகுஞ்சரி வள்ளி மன்னுமண வாள
யோகன் பதிக முரைப்பதற்கு-வாகைமிகு
ஐந்துகர ஞானமுக ஞரணங்கள் தேடரிய
கந்தமலர்ச் சேவடியே காப்பு.

**-குழந்தைவேல் முதலியார்**

44 அந்தமிக வோங்கு மரிமழத்தின் வாழுகின்ற
கந்தன் சரசக் கழில் நெடிற்கே-முந்தமகிழ்
தந்தைதரு மாங்கனிக்குத் தந்தை தனைவலஞ்செய்
தந்திமுகன் ருளே சரண்.

45 பிரணவப் பொருளாம் பெருந்தகை ஐங்கரன்
சரணவற் புதமலர் தலைக் கணிவோமே

46 அற்புதக் கணபதி யமல போற்றியே
தற்பர சண்முக சாமி போற்றியே
சிற்பர சிவகாம தேவ போற்றியே
பொற்பமர் கௌரிதாள் போற்றி போற்றியே.

47 சித்திதரும் புத்திதரும் செந்திருவைச்
[சேர்விக்கும்
பத்திதரும் மெஞ்ஞானம் பாலிக்கும்-கொத்தி
யரிமுகனைக் காய்ந்த வருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்

-அருணகிரியந்தாதி

48 மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கியை யீன்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியைக்
கைக்க ழிற்றினைக் கைதொழு தேத்துவாம்

49 எக்கணக்கிற் கெட்டாத வின்பக் கடலளிக்கும்
முக்கணக்க னினறெடுத்த முன்னவன்ற
—னிக்கணத்திற்
சந்தமிகுஞ் சாரப்ர பந்தந்தான் சொல்லக்
கந்தமலர்ப் பாதமே காப்பு

-நமசிவாய சுவாமிகள்

50 அண்டமனைத் தும்பரவு மண்ணு மலைச்சதக்
மொண்டமிழாற் பேதையே னேதவே
-தொண்டர்பணிந்
தெண்ண வரந்தருநல் யானைதிறை கொண்டருள்
கண்ண வரந் தந்தான் காப்பு. [முக்

51 கீர்த்திபெருஞ் சோண கிரிமுடியின் மீதொளிருங்
கார்த்திகை தீபவெண்பாகட்டுறைக்கப்-பூர்த்தியுற
நம்பந்த வாரணத்தினுதனரு ளைந்துகரச்
சம்பந்த வாரணத்தின் ருள்.

-புராணிகர் சோணசல முதலியார்

52 வாணுளே வீணுளா வையகத்திற் போக்காமற்
சோணு சலவெண்பா சொல்லுதற்கு-நாணுளு
மிங்கழுநீ ராணைநினை யேக்கமறக் காக்குமுக்கட்
செங்கழுநீ ராணைநினை தேர்ந்து

-மேற்படியார்

53 ஆதி யயன்மா லடிமுடியைக் காண்பரிய
சோதிவரை யாகிநின்ற தூயனுெளிர்-பாதிமதி
கற்றைச் சடைக்கணிந்த கண்ணுதலைப் போற்ற
-வெங்க
ளொற்றைகொம் பன்றுணைத்தா முண்டு

54 அண்ணு மலைநாத ரார்ந்திடுபக் கத்தமர்ந்த
உண்ணு முலைப்பதிக மேயுரைக்க–ஒண்ணுன
அந்திநிறத் தானீன்ற வண்ணலெம்மைந்துகரத்
தந்திமுகன் ருளே சரணம்

55 உண்ணு முலைமாய னேங்கு தங்கை சங்கரிமே
லுண்ணு முலைச்சதக மோதுதற்குக்–கண்மூன்று
வேழமுகத்தனை வேழ முகத்தானை
வேழ முகத்தானை வேண்டு

-சின்னக்கவுண்டர்

56 சீர்வளருஞ் செய்ய திருவருணை நாதர்மேல்
தார் வளருஞ் செந்தமிழ்க்குத் தந்துதவும்
[நீர்வளங்கூர்
தேனைநிறை வண்டுண்டு தென்பாடுந்
[தென்னருணை
யானைதிறை கொண்டா னருள்.

-சபாபதி முதலியார்

57 ஓங்குபெரும் பாருதவு முண்ணு முலையணைமேற்
பாங்குபெருஞ் செந்தமிழ்ற் பாவுரைக்க—நீங்கரிய
வெந்துயரெ லாம்போக்கும் வேழமுகன்
[செய்யதிருக்
கந்தமலர்ச் செஞ்சர ணங் காப்பு

58 நண்பாவந் தாதியரு ளூட்டும்வி நாயகன் மேல்
வெண்பாவந் தாதி விளம்புவதற்-கண்பாவம்
வீட்டுமவன் பாதகமென் மேலடரா தென்முடியிற்
சூட்டுமவன் பாதந் துணை.

59 சீரிலங்குந் தந்திமுகத் தேவே முதற்பொருளே
நேரிலங்கு தந்திகழ்கை நித்தனய -ஞரணன்பூங்
கற்பகனீங் காதரவாய்க் காணவரு நின்கழலே
யற்பகனீங் காதென் னகம்

60 அகரமுத லாய்நிறைந்த வைங்கரனே யன்பர்
பகரமுதப் பாக்கொள் பரனே-நுகரமுதத்
தோதமலற் குன்பின் னுரைத்ததெவ
[னுன்னையல்லாற்
சீதமலர் வாய்திறந்து செப்பு.

61 கங்கைதும்பை கொன்றைமதி யறுகுபுனை
[செஞ்சடிலக் கடவு ளூத
னங்கையுறு மாங்கனியைக் கணப்போதில்
[வலமாயங் கவனைச் சூழ்ந்து
செங்கதிர்வேற் குகனணையு முன்னேற்ற
[பெருங்கருணைத் தேவை மெய்மைத்
துங்கமுளோர்க் கருள்விளக்குஞ் சுகத்தானை
[முகத்தானைத் தொழுது வாழ்வாம்

62 பூமேவு நாதன் புகழ்மருதூர் நாகலிங்கர்
பாமே விரட்டைமணி மாலைசொலத்-தூமேவு
கற்பகலாச் சித்திபுத்தி கட்கிருபா லுங்கொடுத்த
கற்பகவி நாயகனே காப்பு.

63 சித்தி விநாயகன் மேற் சீர்மும் மணிமாலை
பக்தியுடன் பாடவருள் பாலிக்குஞ்–சத்தியமெய்
பூண்டவஞ்செய் யாரிதய பொற்கமலப் போது
[புக்குத்
தாண்டவஞ்செய் தோங்குமவன் ருள்.

64 சீராரும் யானைமுகச் சித்தி விநாயகனே
பேராரு முத்தி பெருமானே-நேராக
நின்னையே பாடுவதற்கு நின்ருட் டுணையுதவி
யென்னையே யாதரிப்பை யே.

65 எழுத்தாகிப் பதமாகிப் பொருளு மாகி
யிசையாகி யஃதுண்டு மிறைவ ஞகி
வழுத்தாது வழுத்துகின்ற மௌன மாகி
மறைகளுக்கு மெட்டாத வாழ்வா யன்பு
பழுத்தான சித்திவிநா யுகனே யான்செய்
பழவினையாற் பிணிவருத்தப் பார்த்தாயின்ன
மழுத்தாதன் நோய்தீர்ந்து சுமமாய் வாழ
வருள் புரிவாய் யுனக்கபய மபயந்தானே

66 கையாலே மலரெடுத்துன் பூசை செய்யாக்
கயவர்கடங் கூட்டுறவைக் கருதுகில்லேன்
பொய்யாலே வயிறுவளர்த் துடலை யோம்பும்
புலையர்தமை யாதரவாய்ப் பொருந்து
[கில்லேன்
மெய்யாலே மானதத்தா லுனைத்து தித்தும்
வெம்பிணியில் வருந்திகின்றேன் விக்கினேசா
வையாவந் நோய் தீர்ந்து சுகமாய் வாழ
வருள்புரிவா யுனக்கபய மபயந்தானே

67 மாவளருந் தில்லைநகர் வாழ்நடரா சப்பெருமான்
பாவளரும் வண்பதிகம் பாடுதற்குப்-பூவளருஞ்
சேண்டவர்சூ ழத்துலங்கிச் சித்திபுத்தி தந்தருளுந்
தாண்டவவி நாயகன் ருள்.

68 தென்முகவை வாழுந் திரிபுர சுந்தரிமேற்
பன்முகமின் றிப்பதிகம் பாடுதற்கு-நன்முகமாய்
நத்திவரு மன்பர்முடி நாட்டுங் கணேசனடி
பத்தியுட னோர்ந்துதுதிப் பாம்.

69 மாமே வயோத்திவளர் வாய்மையரிச் சந்திரன் சீர்
பாமேவு வண்ணமதாய்ப் பாடுதற்குத்-தேமேவு
முக்குறுணி யெட்கடலை முக்கனிம டுத்தருள்செய்
கைக்கயமு கக்கடவுள் காப்பு.

70 மின்னுண்ட சடைமுடியு மறுகாதி நறுமலரும் வெண்ணி லாவும்
பொன்னுண்ட திருவுருவும் அங்குசபா சக்கரமும் [பொருவெண் கோடு
மென்னுண்ட கருணையுங்கொண் டரிமழத்தி லன்பர்குழா மெய்தி வாழ்த்து
முன்னுண்ட விநாயகனைப் பன்னுளுந் [தொழுவரின்ப முறுவர் தாமே.

71 காட்டுவழி போனாலும் கள்ளர்பய மானாலும்
கேட்டுவழி காவலனூர் கிட்டினுலும்-நாட்டமுடன்
நம்பிக்கை யாக நமக்கும் விநாயகனுர்
தும்பிக்கை யுண்டு துணை.

72 பிடியத னுருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே

-சம்பந்தர்

73 திருமா லறியாச் சேவடி யாலென்
கருமா லறுக்குங் கணபதி சரணம்
ஐங்கர னடிமலர் இங்குற நினைதிநின்
பொங்குறு துயரறும் மங்கலின் மனனே

74 முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூய்மெய் சுகத்தவனே
-மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையன் சேகரனே
தற்பரனே நின்தாள் சரண்

-இராமலிங்க சுவாமிகள்

75 திருவுங் கல்வியுஞ் சீருஞ் சிறப்புமுன்
திருவடிப்புகழ் பாடுந் திறமும்நல்
உருவுஞ் சீலமு மூக்கமுந் தாழ்வுரு
உணர்வுந் தந்தென துள்ளத் தமர்ந்தவா
குருவுந் தெய்வமு மாகிஅன் பாளர்தங்
குறைதவிர்க்குங்கு ணப் பெருங் குன்றமே
வெருவுஞ் சிந்தை விலகக்க ஜானனம்
விளங்கு சித்தி விநாயக வள்ளலே

-இராமலிங்க சுவாமிகள்

76 நாவிலுனை நாடொறும் பாடுவார் நாடுவார்
[தமைநண் ணிப்புகழவும்
ஓவிலா துனைப்பாட வுந்துன்பெலாம் ஓடவும்
[மகிழோங்க வுஞ்செய் குவாய்
காவிநேர் களத்தான் மகிழைங் கரக்கடவுளே
[நற்கருங் குழியென்னூ மூர்
மேவியன்பர்க் கருள்கண நாதனே விளங்குசித்தி
[விநாயக வள்ளலே

77 திங்களங் கொழுந்து வேய்ந்த செஞ்சடைக்
[கொழுந்தே போற்றி
மங்கைவல் லபைக்கு வாய்த்த மகிணநின்
[மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண் ணருட்சிவ களிறே
[போற்றி
கங்கையாய் மகிழுஞ்செல்வ கணேசநின் கழல்கள்
[போற்றி

78 அடியாருள்ளந் தித்தூறும் அமுதென்கோ
கடியார் கொன்றைச் செஞ்சடையானைக்
[கள்றென்கோ
பொடியார் மேனிப் புண்ணியர் புகழும்
[பொருளென்கோ
அடிகேள் சித்தி விநாயகவென்னென் றறைகேனே

79 அத்தி முகனடி
நித்தம் நினைப்பவர்
சித்தி திருவொடு
முத்தி பெறுவரே.

80 சுரகு லாதிபன் தூமலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினேன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளும் தலைக்கணி யாக்குவாம்.

81 மோக மெனுங் கடல்கடந்து முத்தியெனுங்
கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனும் மலர்கொண்டு பத்தியெனும்
[புனலாட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
[விளக்கேற்றிச் சோகம் நீக்கி
ஆகமெனுங் கோயிலின்கண் அறிவென்னுங்
கணபதிக்கே அன்பு செய்வாம்.

ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்

82 திருமேவு முண்மைச் சிவப்பிரகா சத்தின்
மருமேவு பேருரைக்கு மாணுச்-செருமேற்
றெடக்குஞ் சமர்க்கட் சுரிகுழன்மான் றந்த
கடக்குஞ் சரக்கன்றே காப்பு

83 எண்நிறைந்த தில்லை எழுகோ புரந்திகழக்
கண்நிறைந்து நின்றருளுங் கற்பகமே
-நண்ணியசீர்த்
தேனூறுஞ் செஞ்சொல் திருக்கோவை என்கின்ற
நானூறும் என்மனத்தே நல்கு.

**திருச்சிற்றம்பலக் கோவையார்**

84 ஆத்திசூடி யமர்ந்த தேவனை
ஏத்தி ஏத்தி தொழுவோம் யாமே.

85 வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
வுண்மை விளக்க முறைசெய்யத்-திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்
[றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்

**திரு. இ. செல்லத்துரை**

86 கல்லால் நிழல் மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

**-மெய்கண்டதேவர்**

87 நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்

**-உமாபதி சிவாச்சாரியார்**

88 இயம்புநா லிருந்தமிழின் செய்யுளாற்ரு
லிடையூறுந் தீர்ந்தினிது முடியவேண்டித்
தயங்குபே ரொளியாகி யெங்குநின்ற தலைவனர்
மலைமாது தன்னுேடாடிப்
பயந்தவைங் கரனுற்ருேன் துக்கணிரு பாதப்பரிய
வொரு நீள்கோட்டுப் பெரிய பண்டிக்
கயந்தனடிக் கமலங்கணயந்து போற்றிக்
கருத்திலுற விருந்திமிக காதல் செய்வாம்
-அருணந்தி சிவாச்சாரியார்

89 பஞ்சாச்சர செபத்தாலே பாருளோ ஓங்கநிதம்
குஞ்சர முகத்தினுனே குருபரன் காப்பதாமே

90 மின்னுஞ் சூரியன்மீது மேவச் சிறுபதிகம்
பன்னும் படியெனக்கு பாலிப்பாய் துன்னக்
கடவா ரணனேக் காண்பரிய காரணனே
யிடமாகு முன்மரைத்தாள் தான்

91 மண்ணுயிர்க ளனைத்து மாருதளித்து நல
நண்ணு நவக்கிரக நண்புசொல-தண்ணுலவு
திங்களணி தங்குமுயர் செஞ்சடைமேல்
[ஓங்குமெழில்
கங்கையருள் ஐங்கரனுர் காப்பு.

92 ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வரும்யானை கழலுளும் மறவாமல்
அளியான மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

93 உச்சியின் மகுடமின்ன ஒளிதரு நுதலி னுேடை
வச்சிர மருப்பினுெற்றை மணிகொள்கிம் புரிவயங்க
மெய்ச்செவி கவரிதூங் வேழமா முகங்கொண்டுற்ற
கச்சியின் விகடச்சக்ர கணபதிக் கன்புசெய்வாம்

94 மலரயனுந் திருமாலுங் காணுமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியும் கண்டுதொழப்
[புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ
[புரவாயில்
நிலவியகற் பகக்கன்றி னிறை மலர்த்தாளிணை
[போற்றி

95 திங்களங் குழிவி யென்னத் திகழொரு மருப்பிற்
சோதி
தங்குகிம் புரிவயங்கத் தடாமணி மகுடந்தாங்கித்
துங்கநல் வரங்கள் நல்குந் தூயசீ ரிராம சேதும்
புங்கவர் வணங்கும் யானை முகத்தனைப்
[போற்றல்செய்வாம்

96 நிலம் போற்றும் பணிக்கிரண நிலாவணிந்த
[நாயகனுர் நிருதர் வாழும்
சலம்போற்று மதில்பொடித்த ஞான்றினிய
[பூசனைகள் சால வாற்றிப்
புலம் போற்று மெய்யடியார் விநாயகனென்
[றியம்புமதப் பொருளை நாட்டி
வலம்போற்று மணியிரத மூர்ந்தமழ
[விளங்களிற்றை வணக்கம் செய்வாம்.

97 மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே

98 தும்பிக்கை நீட்டித் துயர்களைவோன் சேவடிமேல்
நம்பிக்கை வைத்து நவில்வதனுல் -இம்பர்
அருள்முத்துத் தாண்டவ ஆண்ருேன் சரிதம்
பொருள்பெற்றுத் தோன்றும் பொலிந்து,

99 ஏரானைக் காவிலுறை யென்னானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினல்-வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரஉற் பத்திவரும்
சத்திவரும் சித்திவரும் தான்

-காளமேகம்

100 தனையன் வேண்டினும் சம்பத்து வேண்டினும்
மனையை வேண்டினும் வான்பயன் வேண்டினும்
கனைவளங் கொள் கணேச புரேசனை
இனிய கற்பக மூர்த்தியை யேத்துவாம்.

சிவத்திரு சொக்கலிங்கஐயா.

101 விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்-விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம்
[தன்மையினுல்
கண்ணிற் பணிமின் கனிந்து

-கபிலதேவர்

102 சீர்கொண்ட தத்துவங்க டெளிந்து ஞான
தேசிகனுற் பிறப்பிறப்புத் தீர்ந்துமுத்திப்
பேர்கொண்ட தாயுமா னவர்தங் காதைப்
பிரபலத்தைப் புராணமதாய்ப் பேசவிந்தப்
பார்கொண்ட துன்பமெலாந் தவிர்த்து மேலாம்
பதமளித்துத் தொண்டர் வினைப் பற்றுநீக்குங்
கார்கொண்ட மதத்தானை முகத்தா னைந்து
கரத்தானை வரத்தானைக் கருத்துள் வைப்பாம்.

103 குழவி வெண்பிறை மிலைச்சியோற் குணித்தமா
தவத்தின்
இழைத டம்புன லருவிதா ழிமையமீன் றளித்த
மழைம தரத்தகண் மரகதப் பசும்பிடி பயந்த
தழைம டற்செவித் தந்திபொற் சரணமே .சரணம்

104 தழைவிரி கடுக்கை மாலை தனிமுதல்
சடையிற் சூடும்
குழவிவெண் டிங்களிற்ற கோட்டது குறையென்
றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற
விணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி
வைப்பாம்

**— நைடதம்**

105 கருதும்ஒரு மலமும்இரு வினையும்மும்
மாயையும் அகலக் கழற்றி நாளும்
ஒருவரிய சிவயோகச் செழுந்தேறல்
வாய்மடுப்பான் உள்ளம் கொண்டோம்
பருகுமணி மாளிகைக் காரைக் குடிவயங்கப்
பொலியும் அறுபத்துமூவர்
திருமடத்தில் வீற்றிருக்கும் அனுகூல
மழகளிற்றைச் சிந்திப் பாமால்

106 நீடாழி உலகத்து மறைநாலோ டைந்தென்று
நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதம்
சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக வன்கூரெ
ழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு
கூர்வாமரோ

**–பாரதம்**

107 கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொருள் திரள்புய மதயானை
மத்தள வயிறனை யுத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவோனே
முத்தமி ழடைவினை முற்படுகிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த வச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதி தீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாக்கி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே

– திருப்புகழ்

108 கோவேயெம் கோமானே மருதங் கூறெங்
குலதெய்வ கற்பகமே கோது நீக்குந்
தேவேயென் றுயர் குலநல் வணிகரன்பிற்
சென்றிறைஞ்ச மணப்பேறு செல்வப்பேறு
நாவார்கல் விப்பேறு மக்கட் பேறு
நயப்பேறு முதலெவையும் நல்கி எந்தாய்
ஆவார்நல் லருட்பேறு அளிக்கின் றாய்என்
அகிலமெலாம் எடுத்துரைப்ப அறியார் யாரே–




# வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க !
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனி வேல்வாழ்க !
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க !
யானைதன் அணங்கு வாழ்க !
மாறிலா வள்ளி வாழ்க !
வாழ்கசீர் அடியா ரெல்லாம்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க [மன்னன்
கோன்முறை அரசுசெய்க குறைவிலா துயிர்கள் [வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி [மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்

## பிழைத்திருத்தம்

| பாட்டு எண் | பாட்டு வரி எண் | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| | 6 | ந்து | ததுந் |
| | 11 | உள் | ஊ |
| | 11 | மெ | வெ |
| | 10 | — | மா |
| 3 | 1 | சே | செ |
| 23 | 8 | மல் | மல |
| 24 | 3 | வின் | விண் |
| 49 | 2 | னீன | னீண் |
| 50 | 3 | தெணண | தென்ன |
| 56 | 3 | நிறை | நீறை |
| 65 | 7 | சும் | சுக |







## எமது நூல்கள்

•

★ ஜெகத் குரு ஸ்ரீ லஸ்ரீ
சிருங்கேரி சுவாமிகள்
பேரில் எழுசீர்
தோத்திர பஞ்சகம்

வெளி வர இருப்பவை

★ மகாவிஷ்ணு தோத்திரரட்டு

★ மற்றும் சைவசித்தாந்த
நூல்கள்

ஷண்முகா பிரஸ், புதுக்கோட்டை.